# என்னுரை

ஒருவன் பயணத்தை மேற்கொள்ள முதலில் அடைய வேண்டிய இலக்கை நிர்ணயிக்கவேண்டும். இலக்கு நிர்ணயித்து முடித்தவுடன், அதற்கான சரியான பாதையைத் தேந்தெடுக்க வேண்டும். அப்பொழுதுதான் அவன் அந்த சரியான பாதையில், சரியான காலத்தில், சரியான இலக்கை அடையமுடியும்.

அதுவே, அவன் நிர்ணயித்த இலக்கு சரியாக இருந்து, பாதை தவறாக இருந்தால், அவன் சுற்றுப்பாதையில் சுற்றித்திரிந்து அந்த இலக்கை அடைய காலதாமதம் ஏற்பட்டு, அந்த இலக்கை அடைய முடியாமல், பயணம் பயனற்றுப் போக வாய்ப்பு உள்ளது.

அவன் பாதையைச் சரியாகத் தேர்ந்தெடுத்து, சென்றடைய வேண்டிய இலக்கைச் சரியாகத் தேர்ந்தெடுக்க தவறினாலும், அவன் நினைத்த இந்தப்பயணம் பலன் இல்லாமல் போய்விடும்.

அதுபோல, ஒவ்வொரு மனிதனும் இந்த பூமியில் பயணம் செய்துக்கொண்டு இருக்கின்றான். ஆனால், தான் மேற்கொண்ட இந்தப் பயணம் எதற்காக என்பதையும், பயணத்தின் முடிவு என்ன என்பதையும் அறியாமலேயே பெரும்பாலான மனிதர்கள் பயணித்துக்கொண்டுள்ளனர்.

எவன் ஒருவன் இந்த மகத்தான மனிதப் பிறவியின் மகத்துவம் தெரிந்துக் கொண்டு, தான் மேற்கொண்டுள்ள பயணத்தின் உண்மைத் தன்மையை அறிந்துக் கொண்டு, இனியாவது பயணத்தைச் சரியாகத் தொடர நினைத்தான்

என்றால், அவனது இலக்கு இறை(அ)வனைத் தவிர வேறு என்னவாக இருக்கமுடியும்.

இறைவனை இலக்காக அடையும் இலட்சிய பயணத்தை மேற்கொள்ளும் ஒருவன், அதற்கான பாதையைச் சரியாக அறிந்து கொள்ள வேண்டும். இறைவனை அடையும் பாதைகள் பல இருந்தாலும், அதில் சரியான பாதையை அறிந்து கொள்வதில்தான், அவனது பயணம் பயனுடையதாக முடியும்.

இதை எவன் ஒருவன் புரிந்துக் கொண்டு, தவறான இலக்கை அடைய, தவறான பாதையில் பயணம் மேற்கொள்வதை தவிர்த்து, சரியான இலக்கையும், சரியான பாதையையும் அறிகின்றானோ, அவனே ஆறாவது அறிவின் அவசியத்தை அறிந்த அறிவுடையவன் ஆகின்றான்.

உண்மை அறிவை அறிய விரும்பும் ஒருவன் '**சாஸ்திரம்**' என்ற வரைபடத்தின் துணைகொண்டு, '**பக்தி**' என்ற சரியான பாதையை தேர்ந்தெடுத்து, '**இறைவன்**' என்ற இலக்கை அடைய '**ஆத்மகுரு**' என்ற வழிகாட்டியுடன் பயணத்தை மேற்கொண்டால், அவனே அந்த பயணத்தின் முழுப் பலனையும் அடைந்து '**பிறவாமை**' என்ற பெரு நிலையை அடைகின்றான்.

அப்படிப்பட்ட அந்தப்பெரு நிலையை அடைகின்ற சரியானப் பாதையை இந்தப் "**பக்தி**" என்ற நூல் வழிகாட்டப் போகின்றது.

ஓம் சாந்தி! ஓம் சாந்தி! ஓம் சாந்தி!

# பக்தி

இறைவனின் தெய்வீக சொரூபத்தினிடத்திலும், ஆத்ம குருவினிடத்திலும் ஏற்படுகின்ற அபரிமிதமான அன்பிற்கு “**பக்தி**” என்று பொருள்.

அன்பு செலுத்தாமல் யாரும் ஆத்மாவை அறிய முடியாது. அன்பே சிவம் என்று அறியாதவர்களுக்கு ஆத்ம ஞானம் வராது. அதுபோல, அன்பு இன்றி பக்தி இல்லை, பக்தியின்றி கர்மம் இல்லை, கர்மம் இன்றி ஞானம் கிடையாது.

பக்தி ரசத்தை அருந்தியவர்கள், அந்த ஆனந்தத்தை அனுபவித்தவர்களே உண்மையான பக்தர்கள்.

சாஸ்திரம் படித்தவர்களும், ஞானம் உடையவர்களும் மட்டுமே இறைவனை அணுக முடியும் என்பது இறைக் கொள்கையாக இருந்தால், இறைவன் என்பவன் சாதாரண பாமர மனிதர்களால் அணுக முடியாதவனாகிறான்.

‘கடவுளின் மீது நிலையாகக் காட்டப்படும் உயர்ந்த அன்புக்கு “**பக்தி**” என்று பெயர்.

அன்பின் அடிப்படையில் அமையும் பக்தியின் ஆழத்தை எந்தவகையிலும் பிரித்து அறிய முடியாது.

**“ஊமை மனிதன் இனிப்பைச் சுவைத்து உணரும் அனுபவம் போன்றது பக்தி”** என நாரத பக்தி சூத்திரம் பக்திக்கு விளக்கம் தருகிறது.

சாதாரண மனிதனிடத்தில், ஒழுங்கையும், தூய்மையையும் ஏற்படுத்த பக்தியினால் மட்டுமே முடியும்.

“அங்கோலா விதை அதன் அடிமரத்தைச் சுற்றி இருப்பது போல, காந்தம் இரும்பை ஈர்ப்பது போல, கடலில் சேரும் நதியைப் போல இறைவனின் திருவடியை நோக்கி சதா மனம் செல்வதுதான் “**பக்தி**” என ‘**சிவானந்தலஹரி**’ அனைவருக்கும் புரியும் வகையில் அறிய உவமைகளைக் கூறுகின்றது.

பாகவத புராணம் பக்தியில்லாத மனிதனை விலங்குடன் ஒப்பிட்டு கூறுகிறது.

பாலைவனத்து முட்செடியை விரும்பி உண்ணும் ஒட்டகத்தின் வாயில் அந்த முட்செடி குத்தி ரத்தம் வந்தாலும் அதை மிகப்பிரியமாகத் தின்கின்றது. அதுபோல, மனிதன் எத்தனை துன்பங்களை அடைந்தாலும், இந்த உலக விஷய சுகங்களை விரும்பி ஏற்று, இன்பமாக அனுபவிக்கின்றான்.

ஒரு நாயைப் போல பல அவமானங்களை தாங்கிக்கொண்டு வாழவே விரும்புகிறான். கழுதைப் போல குடும்ப கஷ்டங்களை சுமக்கிறான்.

இதுபோன்ற தேவையற்ற விஷய சுகங்களில் மனிதன் நாட்டம் செலுத்துகின்றான். ஆனால், பகவான் மீது பக்தி செலுத்த மறுக்கிறான்.

மேலும், பாகவத புராணம் கூறுகின்றது. பக்தியில்லாத மனிதர்கள், உலகில் பணம், பதவிக்கும் ஆசைப்பட்டுக் கொண்டு, அத்தியாவசிய தேவைகளுக்கு மேலே சொத்து சேர்த்துக்கொண்டு பாசம், பகை, சோகம், ஆசை, தோல்வி, நான், எனது என்ற பற்றின் காரணமாக எண்ணற்ற துயரத்திற்கு உட்படுகின்றார்கள்.

இவையெல்லாம் எதுவரை தொடர்கின்றன என்றால், ஆண்டவனே உன் திருவடிகளை பற்றினேன் அபயம் தர வேண்டும், என்ற பக்தி உருவாகி, என்னை உன்னுடயவனாக்கி கொள் என்று கூறும் அன்பு உருவாகும் வரை தான் தொடர்கின்றன.

ஒவ்வொரு மனிதர்களும் தங்களது கடமை, தவம், கர்மபலன், உயர்ந்த சிந்தனை, லட்சியம், எல்லாம் ஆத்மாவை அறிகின்றதற்காகவே அமைத்துக்கொள்ள வேண்டும். அந்த ஆத்மாவை அறியும் அறிவு உயர்ந்த பக்தியினால் மிக சுலபமாக உண்டாகின்றது.

அறம், பொருள், இன்பம், வீடுபேறு அடைய பக்தி மிகவும் அவசியமாகின்றது.

பக்தியின் பொருள் பல இடங்களில் பல சூழலில் வேறு வேறு விதமாக மாறுவதும் உண்டு.

பக்தி என்றால் விசுவாசம், பயம் கலந்த பணிவு, சிரத்தையின் வெளிப்பாடு, அல்லது தன்னைவிட மேல்நிலையில்

இருப்பவரிடம் செலுத்தப்படும் மரியாதை என்று பல அர்த்தங்களை கூறலாம்.

ஆனால், நாரத பக்தி சூத்திரத்தில் நாரதர் குறிப்பிடுவது, அன்பின் எல்லையே பக்தி, அது இறைவனிடம் மட்டு**மே** செலுத்தக்கூடிய பக்தி என்கின்றார்.

ஆசை, சுயநலம் இல்லாத அந்த தூய பக்தி இறைவனிடம் மட்டும் உருவாகி விட்டால், அது இந்த உலகத்தில் எந்த பொருளையும், சுகத்தையும் சார்ந்து இருக்காது. புண்ணியங்களால் கிடைக்கும் பரலோக இன்பங்களையும், மோட்சபதவியையும் கூட விரும்பாத அந்த பக்தியை, "**அனன்ய பக்தி**" என்று கூறுகிறார்.

ஒளி வாங்கிக் கண்ணாடி ஒளியை வேறுபக்கம் சிதறடிக்காமல், ஒரே இடத்தில் குவிக்கின்றது. அதனால் அந்த ஒளிக்கு ஆற்றல் அதிகமாகி அங்கு ஒரு தீயை உண்டாக்க முடியும். அதுபோல, பகவான் மீது உண்மையான பக்தி கொண்ட பக்தன் வேறு இடத்திற்கு மனம் போகாமல், சதா அந்த பகவானிடத்திலேயே தன் மனத்தைக் குவிப்பான். அதனால், அவன் எத்தகைய துன்பத்தையும் தாங்கும் ஆற்றல் உள்ளவனாகின்றான். இதை **"அனன்ய பக்தி"** என்று கூறுவார்கள்.

மனதில் பரமனிடம் அன்பு பெருக்கு ஏற்பட்டு பக்தி உருவாகி விட்டால், மற்ற சுகங்களை அடையும் ஆசை வரவே வராது.

உலகியலில் காணப்படுகின்ற பதவி, பற்று, ஐஸ்வர்யம், சௌந்தர்யம், பலம், புகழ், ஞானம், வைராக்யம் ஆகியவை சுக வாழ்விற்கும், தியாகத்திற்கும் தேவைபடுபவை என நினைத்து, அனைவரும் அவைகளை நோக்கி விரும்பி ஓடுகிறார்கள்.

ஆனால் உலகில் நிரம்பி வழியும் அனைத்து சந்தோசங்களும், ஆண்டவனின் “**பிரேமைபக்தி**” என்ற கடலின் முன்பு சிறு துளிக்கும் ஈடாகதவை.

பகவான் காந்தம் போல தன்னில் இழுத்து ஆட்கொண்டுவிட்டால், ஈசனான பகவானின் பக்திக்கு வசமாகிவிட்டால், அவன் அமிர்த கடலில் மூழ்கி விடுவான். அதன் பின் குட்டையில் தேங்கிய நீரை நோக்கி போக மாட்டான்.

பக்தியை பற்றிக் கொள்பவனுக்கு ஏன் மற்ற விஷயங்கள் பிடிக்காமல் போகின்றன என்றால், மற்ற விசயங்களில் சோகங்கள் மறைந்து உள்ளன. சுகங்கள் எல்லாம் அவனுக்கு துன்பமாக தெரிகின்றன. சுகமும் சந்தோசமும் ஒரு எல்லைக்கு உட்பட்டு இருக்கின்றன. ஆதலால் சுக சந்தோசங்கள் அவனிடம் வந்தாலும் அவனை விட்டு பிரிந்தாலும் அவனுக்கு கவலையில்லை என சுகதேவ முனிவர் கூறு**கிறார்**.

பிரேமை பக்தி என்பது ஆசையின் அடிப்படையில் உருவாவது. கோவிலுக்குச் செல்லும் பக்தர்கள், இறைவனை வணங்கி தனக்கு அது வேண்டும், இது வேண்டும் என்று கோரிக்கை வைத்து வழிபடுவார்கள். மேலும், தனக்கு புகழ் வேண்டும்,

நோயின்றி சுகமாக வாழவேண்டும், அளவற்ற செல்வம் வேண்டும், பகைவர்களை வெல்ல வேண்டும் என வேண்டிக்கொள்வார்கள். இதுவும் பக்தியின் ஒரு நிலைப்பாடுதான், இவர்கள் கோரிக்கை நிறைவேறாமல் போனால் இவர்களுக்கு பக்தியில் முன்பு போல தீவிரம் இருக்காது அல்லது இறைவனின் மீது கோபம் வரும்.

அனன்ய பக்தி என்பது, நீ எனக்கு எத்தனை இன்னல்களை கொடுத்தாலும், சோதித்தாலும் நெருப்பிலிட்ட தங்கம் போல நான் மின்னுவேன் என்ற மனப்பக்குவதுடன் இருப்பது ஆகும்.

ஆழ்வார்களும் நாயன்மார்களும் எவ்வளவோ கஷ்டங்களை சந்தித்தார்கள் இருந்தும் இறைவன் மீது மாறாத பக்தி கொண்டார்கள்.

"எவன் எல்லா உயிரினங்களிலும் வெறுப்பு இல்லாதவனோ, தன்னலம் இல்லாமல் எல்லோரிடமும் அன்பு கொண்டவனோ, காரணமின்றி இரக்கம் காட்டுபவனோ, நான், என்னுடையது என்ற ஆணவமற்றவனோ, இன்ப, துன்பங்கள் நேரும்போது நிலைமாறாது சமமாக இருப்பவனோ, பொறுக்கும் இயல்புடையவனோ அதாவது குற்றம் செய்தவனுக்கும் அபயம் அளிப்பவனோ, யோகியோ, எப்பொழுதும் எல்லாவிதங்களிலும் திருப்தி உள்ளவனோ, மனம் மற்றும் புலன்களோடு கூடிய உடலைத் தன்வசப் படுத்தியவனோ, மேலும் என் மீது திடமான நம்பிக்கை உடையவனோ, என்னிடத்தில் மனம், புத்தி இவற்றை அர்ப்பணம் செய்தவனோ, என்னுடைய அந்த பக்தன்

எனக்குப் பிரியமானவன்” என்று கீதையில் பகவான் கிருஷ்ணர் கூறுகின்றார்.

பராசர மாமுனிவர் புதல்வர் ஸ்ரீ வியாசபகவான் பகவானை பூஜிப்பதன் மூலம் பக்தியை வெளிப்படுத்தலாம், அதில் ஏற்படும் மிகுந்த ஈடுபாடு தான் பக்தி என்று கூறுகிறார்.

மனம், வாக்கு, தேகம் இவை மூன்றையும் பூஜை செய்யும் கருவிகளாக பிரயோகிக்கவேண்டும். பகவானின் விக்ரஹத்திற்கு பூஜை செய்ய வேண்டும். அல்லது பகவானை விசுவாத்மாவாக அதாவது, எங்கும் நிறைந்தவனாக நினைத்து, அனைத்து உயிர்களிலும் உறைபவன் என்பதால், அனைத்து உயிர்களையும் நேசிக்க வேண்டும். இப்படிப்பட்ட பக்தன் முற்றிலும் பகையைத் துறந்து விடுவான். ஆசைகளுக்கு அடிமையாக மாட்டான்.

தன்னுள் இருக்கும் ஆத்மாவை உணர்வதும், அதற்கு சாதகமான விசயங்களில் அன்பு செலுத்துவதும் தான் உண்மையான பக்தி என்று சாண்டில்ய மகரிஷி கூறுகிறார்.

சகல உயிர்களுக்கும் இறைவன் ஆத்மாவாக வீற்று இருக்கிறார். அந்த சர்வாத்மா மீது அன்பு செலுத்துவது தான் பக்தி. அந்த பக்தி குடி கொண்டு விட்டால் முக்தி நிச்சயம் கிடைக்கும் என்று சங்கராச்சாரியார் கூறுகிறார்.

“எவனிடமிருந்து எந்த ஜீவனும் பாதிப்பு அடைவதில்லையோ, எவன் எந்த ஜீவன் மூலமும் பாதிப்படைய மாட்டானோ, மேலும் எவனொருவன் மகிழ்ச்சி, பொறாமை, பயம், பாதிப்பு

முதலியவற்றிலிருந்து விடுபட்டவனோ, அந்த பக்தன் எனக்குப் பிரியமானவன்” என்று பகவான் கிருஷ்ணர் கூறுகின்றார்.

பிறவியெடுத்து தேகத்தால் செய்யப்படும் செயல்கள் அனைத்தும் பகவானுக்காகவே இருக்கும். அவனுக்கே அர்ப்பணம் செய்யப்பட்டிருக்கும். தன் காதல் நாயகன் போல இருக்கும் பகவானை நினையாத நொடி வீணானதே என்று வருந்துவதே உண்மையான பக்தி.

பகவானை பூஜை செய்வது, அவர் குணங்களை பாடுவது, சர்வாத்மாவாக இருக்கும் பகவானிடம் அன்பு செலுத்துவது எல்லாமே பக்தியின் லக்ஷணங்கள் என்று அனைவரும் ஒப்புக்கொண்ட விஷயம்.

ஆச்சாரியார்களின் கருத்தை மேலும் வலுப்படுத்தும் விதமாக நாரதர் கூறுகிறார்.

உடல், ஆத்மா, பொருள் எல்லாம் அவனுக்கே அர்ப்பணம் செய்துவிட்டு, அவனை நினைத்துக் கொண்டு கர்மங்கள் செய்யவேண்டும். எந்த சந்தர்பத்திலும் மனம் அவனை விட்டு நீங்காதிருக்க வேண்டும்.

“எவன் ஒருவன் எதையும் எதிர்பார்க்காதவனாகவும், அகத்தூய்மையும் புறத்தூய்மையும் உள்ளவனாகவும், பிறவிப்பயனை அறிந்தவனாகவும், பட்சபாதமற்றவனாகவும், துக்கங்களிலிருந்து விடுதலை பெற்றவனாகவும், செயல்கள் அனைத்திலும் ‘**நான் செய்கிறேன்**’ என்னும் அபிமானத்தை நீக்கியவனாகவும் உள்ள அந்த என் பக்தன் எனக்குப்

பிரியமானவன்” என பகவான் கிருஷ்ணர் **கீதையில்** வலியுறுத்துகின்றார்.

உலகியலில் ஒரு பெண்ணோ, ஆணோ ஒருவர் மீது ஒருவர் அன்பு காட்டினால், அதன் பின்னால் பல விசயங்கள் ஒளிந்து இருக்கும். எந்த அன்பும் பலனை எதிர்பாராமல் உருவாகாது. பெண் ஒரு ஆணை காதலித்தால், அவன் தன்னை ஆதரிக்க வேண்டும். தன் ஆசைகளை நிறைவேற்றி வைக்க வேண்டும். வாழ்நாள் எல்லாம், தமக்கு துணையாக பாதுகாப்பாக இருக்க வேண்டும் என்று பல பலன்களை எதிர்பார்ப்பாள்.

அது போல ஆணும், அவனுக்கு தகுந்த பல லாபங்களை எதிர்பார்ப்பான். இது போல உலகியல் காதலுக்கு முற்றிலும் எதிரானது, இறைவன் மீது செலுத்தப்படும் பக்தி அல்லது பிரியம். அதையே கோபிகை பெண்கள் செய்தார்கள்.

ஸ்ரீ கிருஷ்ணனால் அவர்களுக்கு ஆகவேண்டியது எதுவும் இல்லை. அந்த தூய பிரேமை பக்திக்கு உலகியல் காதல் ஈடாகாது. அவர்களுக்கு ஸ்ரீ கிருஷ்ணனை நினைத்தாலே பரவச நிலை ஏற்பட்டது. அந்த பரவசநிலை யோகிகளுக்கு மட்டும் கிடைக்க கூடியது. கோபிகை பெண்கள் மோட்சத்தையும் விரும்பவில்லை. கிருஷ்ணனையே தங்கள் இலட்சியமாக கொண்டு வாழ்ந்தனர்.

பாகவத புராணத்தில் கோபியர்க்கும் ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் இடையே நடந்த சம்பாஷனை அனைவரும் அறியக்கூடிய ஓர் உண்மையை வெளிப்படுத்துகிறது.

**கோபிகை பெண்கள் கூறுகிறார்கள்:**

கிருஷ்ணா, உலகில் சில பேர் அன்பு செலுத்தினால் மட்டுமே பதிலுக்கு அன்பு செலுத்துகிறார்கள். சிலர் அன்பு செலுத்தாவிட்டாலும் கூட மற்றவர்களை நேசிப்பவர்களாக இருக்கிறார்கள். சிலர், இருவரில் எவருமே தங்களது அன்பை பரிமாறிக் கொள்வதில்லை. இந்த மூன்று இரகமானவர்களில் யாருடைய அன்பை உயர்வாக எண்ணுகிறாய்?

**ஸ்ரீகிருஷ்ணன் பதிலுரைக்கிறார்:**

பிரிய சகிகளே, ஒருவர் அன்பை காட்டினால் தான் மற்றவர் அன்பாக இருப்பது என்பது சுய நலத்தின் அடிப்படையில் உருவாகிறது. அது ஒன்றை கொடுத்து, ஒன்றை வாங்குவது போல வியாபாரமாகிறது. அதில் உள்ளார்ந்த நட்பும் இருக்காது. தர்மமும் இருக்காது. அந்த அன்பு நிலைத்தும் இருக்காது. ஏனெனில் காரியம் முடிந்தவுடன் அவர்கள் விலகிச்செல்வார்கள்.

இரண்டாவது இரகத்தினர் அன்பு செலுத்தாமல் இருந்தும் அன்பாக இருப்பார்கள். சான்றோர், குரு, தாய், தந்தை போன்றவர்கள். இவர்கள் சுபாவத்திலேயே பாசமுள்ளவர்கள் இதயத்தில் அன்பு சுரந்து கொண்டே இருக்கும். மற்றவர்கள் அன்பு செலுத்தாவிட்டாலும் கூட, அவர்கள் நன்மைக்காக பாடுபடுபவர்கள். மகான்கள் அல்லது உண்மையான நண்பர்களும் இவ்வாறு இருக்கலாம். இவர்களின் அன்பில் சத்தியமும் தர்மமும் இருக்கும்.

மூன்றாவதாக எவ்வளவு அன்பு செலுத்தினாலும் அன்புடன் இருக்க மாட்டார்கள். முற்றும் துறந்த யோகிகளுக்கு அன்பும் கருணையும் கூட தடையாக இருக்கும். அவர்கள் இறைவனை அனைத்துயிர்களிலும் காண்பார்கள். அவர்கள் அன்பு, பாசம் ஆகிய வலையில் விழாமல் பற்றற்று இருப்பார்கள். இவர்களும், யோக சாதனையில் ஈடுபட்ட சாதகர்களும், எவரிடமும் எதையும் விரும்பாமல் பற்று என்ற அன்பை பிறரிடம் காட்ட மாட்டார்கள்.

வேறொரு இரகத்தினர் புத்தி சுவாதீனம் இல்லாதவர்கள். தம்மிடம் யார் அன்பு செலுத்துகிறார்கள் என்பதை அறிய மாட்டார்கள்.

மற்றொரு இரகத்தினர் உபகாரம் செய்து தன்மீது அன்பு கொண்டவர்களிடமும் பிரியமாக இருக்க மாட்டார்கள். இவர்கள் கல் நெஞ்சக்காரரர்கள். அல்லது துரோகிகள். நெஞ்சில் பகை வளர்த்துக்கொண்ட பகையாளிகள் அல்லது திருடர்களாகவும், தீயவர்களாகவும் இருப்பார்கள்.

கோபியர்களே, மேற்சொன்ன எல்லாவித அன்பும் என்னில் பொருந்தாது. இறைவன் உயிர்களிடம் செலுத்தும் அன்பு என்ற அருள் ஒப்பற்றது. அதற்கு எதுவும் ஈடாகாது.

இறைவன் அருள் எங்கும் ஒரே மாதிரி தான் பொழிகிறது. இறைவன் அருளை பெறுவதற்காக, பக்குவப்படுவதற்காக, வைரம் போல பக்தர்கள் பட்டை தீட்டப்படுகிறார்கள்.

இறைவனை அடையும் பாதைகள் நான்கு உள்ளன.

அவைகள் முறையே, **சரியை**, **கிரியை**, **யோகம்**, **ஞானம்** என்னும் நான்கு பாதைகளாகும்.

## சரியை

ஒருவன் அதிகாலைப் பொழுதில், சூரிய உதயத்திற்கு முன்பு எழுந்து, குளித்து தூய உடை அணிந்து, இறைவனை **உருவ** வழிபாடு செய்து, **"பக்தன்"** என்ற நிலையில் தொண்டு புரிந்து, இறைவனை அடையும் பாதையான "**தாச மார்க்கம்**" மேற்கொண்டு "**சாலோகம்**" என்ற நிலையை அடைவது.

## கிரியை

ஒருவன் இறைவனை **உருவமும்**, **அருவமும்** கலந்த நிலையில் வழிபட, வழிபட மக்கள் தொண்டே மகேஷன் தொண்டு என்ற நிலை உருவாகி, மற்றவர்களுக்கு பல நற்செயல்களைச் செய்து, "**கர்மவான்**" என்ற நிலையில் "**கடவுளை தந்தையாகவும், தன்னை கடவுளின் புத்ரனாகவும்**" அனுஷ்டித்து அடையும் பாதையான "**சத்புத்ர மார்க்கம்**" மேற்கொண்டு "**சாமீபம்**" என்ற நிலையை அடைவது.

## யோகம்

ஒருவன் இறைவனை **அருவமாக** வழிபட ஆரம்பித்து, பிராணாயாமம், ஆசனம் போன்ற அஷ்டாங்க முறையில் பயிற்சிகள் மேற்கொண்டு, இறைவனை நண்பன் போல பாவித்து, "**யோகி**" என்ற நிலையில் அவனை அடையும் பாதையான "**சகமார்க்கம்**" மேற்கொண்டு "**சாரூபம்**" என்ற நிலையை அடைவது.

இப்படி **மேற்சொன்ன மூன்று பாதைகளில்** இறைவனை அடைய விரும்புபவர்கள் பெறுவது "**பதமுக்தி**" ஆகும்.

## ஞானம்

ஒருவன் மனக்கண்ணால் தான் இன்னது என்று அறிந்து அம்மயமாகி, மஹாவாக்யத்தின் பொருளுணர்ந்து, பரம தாத்பர்யத்தை ஆராய்ந்து, பிரபஞ்சம், ஜீவன், ஈஸ்வரன் இவற்றின் மூல தத்துவத்தை அறிந்து, காண்பவன், காட்சி, காணப்படும் பொருள் இந்த மூன்றும் ஒன்றேயான அந்த பரப்பிரம்மம் என்று அறிந்தவன் "**ஞானி**" என்ற நிலையில் "**சன்மார்க்கம்**" மேற்கொண்டு "**சாயுஜ்யம்**" என்ற நிலையை அடைவது.

இது “**பரமுக்தி**” என்ற பரமானந்த நிலையாகும்.

இதில் சன்மார்க்க நிலையான “**பரமுக்தி**” பெற்றவன், மறுபிறவி இல்லாததால் மீண்டும் பிறக்காமல், இறைவனுடன் இரண்டறக் கலந்து விடுவான்.

இந்த நான்கு பாதைகளின் வழியாக பயணத்தை மேற்கொள்ளும் எவரும் அந்த பரமபதத்தை அடைய முடியும்.

கர்மயோகத்தை விட, ஞானயோகத்தை விட “**பக்தியோகம்**” மிகவும் எளிதானது.

ஞானயோகமும், கர்மயோகமும் மற்ற எல்லா பாதைகளும் அந்த பரமனிடம் கொண்டு சேர்கின்றன. ஆனால், இவற்றை சரியாக அனுஷ்டிக்காமல், நடுவில் சில தவறு நடந்தாலும், ஆரம்பத்திலிருந்து ஆரம்பிக்க வேண்டியது தான். மேலும் இவற்றை கடைபிடிக்க பல விதமான இயம, நியமங்களை அனுசரிக்க வேண்டிய கட்டாயம் உள்ளது.

பக்தி செய்ய எந்த தகுதியும் வேண்டியதில்லை. உதாரணமாக, வால்மீகி முனிவர் ஒரு கொள்ளைக்காரனாக இருந்தார். கண்ணப்பநாயனார் ஒரு வேடுவனாக இருந்தார். இவர்கள் செய்த பக்தி, தவம் செய்த முனிவர்களையும் மிஞ்சக்கூடியது. துளசிதாசர் செய்த ராம பக்தியை விட, ராம நாமத்தை விட சிறந்தது எதுவும் இல்லை.

பல காலம் சிரமப்பட்டு ஸ்ரவணம், மனனம், மற்றும் நிதித்யாஸனம் மேற்கொண்டு ஞானம் பெற வேண்டும். யாகம் செய்வதற்கோ பொருள் செல்வம் வேண்டும். கடினமான யோக பயிற்சியில் வெற்றி பெற யோகாசனம், பிரணாயாமம் முதலியவற்றை சரியாகச் செய்ய வேண்டும்.

பக்தியோகத்தில் இவை எதுவும் தேவை இல்லை. தூய்மையான அன்புடன் ஒரு பூவை சாற்றினால் போதும், அல்லது தமக்கு கிடைத்த உணவை படைத்தாலே போதும், பிரார்த்தனை செய்தாலே போதும்.

பாகவத புராணத்தில் பகவானே கூறுகிறார்:

யோகம், ஞானயோகம், தர்மம், ஸ்வாத்யாயம் (வேதங்களை படித்து தத்துவார்த்தமாக பாராயணம் செய்வது) யாகம், தவம், தியாகம் ஆகியவற்றால் கூட, நான் சீக்கிரம் வசப்படமாட்டேன். சான்றோர்களின் பிரிய ஆத்மாவாக இருக்கும் நான் சிரத்தை, பிரேமையுடன் கூடிய அன்பான பக்திக்கு மட்டுமே கட்டுப்படுவேன். என்னுடைய பக்தன் எப்படிப்பட்டவனாக இருந்தாலும், தூய பக்தியால் சித்தி பெற்று விடுவான்.

பக்தி என்பது முழுமையாக, பிரதானமாக இருந்து பலன் தர கூடியது. அதாவது இங்கு பிரேமை பக்தியே முழுமையாக இருக்கிறது. இங்கு பக்தி சாதனமாக இல்லை.

புனித தலயாத்திரை, ஞானம், வைராக்கியம், யோகம், கடமை, தர்மம் (அறம்) விரதம், உபாசனை, தானம், புலனடக்கம், யம நியமங்கள், ஜபம், தபம், யாகம், குருசேவை, கல்வி, பணிவு,

விவேகம், புகழ், வேதங்களை கற்று உணர்தல், இவை எல்லாம் இறைவனை அடைவதற்காக துணை புரியும் சாதனங்கள்.

பக்தியை அடிப்படையாக கொண்டு தான் இந்த சாதனங்கள் பலன் தருகின்றன. ஆனால் பக்தி இந்த அனுஷ்டானங்களில் துணையாக இருக்கிறது. பக்தி இல்லாமல், எந்த ஜப தபங்களிலும் வெற்றி கிடைக்காது. அதனால், மற்ற சாதனங்களுக்கு முக்கயத்துவம் கொடுக்காமல் பக்திக்காகவே பிரேமை பக்தியை உருவாக்க வலியுறுத்துகிறார்கள். ஆதலால், இங்கே கூறப்படும் பக்தி எந்த துணை சாதனமும் அல்லாமல், முழுமையான பக்தியாகவே கூறப்படுகிறது.

கர்மயோகத்தையும், ஞானத்தையும் விட பக்தியே சிறந்தது என்று கூறிவிட்டு, பக்தி யோகத்தை பின் பற்ற, ஆச்சாரியர்கள் உபதேசிக்கும் உபாயங்களை கூறுகிறார்.

பக்தியோக வழியில் செல்ல வேண்டுமானால், ஆசைகளை தூண்டும் விசயங்களை துறக்க வேண்டும். அதாவது, இன்பம் என்று கருதப்படும் விசயங்களில் ஒட்டுதல் இல்லாமல் இருக்க வேண்டும்.

ஒவ்வொரு உயிருக்குள்ளும் இருக்கும் ஆத்மா ஆனந்த ரூபமானது. அது அன்பு மயமானது. ஏனெனில் ஆத்மா, பரமாத்மா இரண்டும் இறைவன்தான். இறைவன் பரமானந்த சொரூபமானவர். பரம பிரேமை என்ற அன்புமயமானவர்.

ஜீவனில் சித்தம், ஆசை, துக்கம், கிலேசம் முதலியவற்றை பற்றிக்கொள்ளும் போது அது கலங்கிப் போகிறது. அதில்

தெளிவு ஏற்படாது. ஆதலால் துக்கத்தை தரும் ஆசைக்கு அடிமையாகி விடுகிறது.

ஆதலால் சித்தத்தில் பரமாத்மனின் தெய்வீக சொரூபத்தின் ஒளி பிரதிபலிக்காமல் இருக்கிறது. அந்த ஆத்ம ஜோதி தெரிய வேண்டுமென்றால், விசயங்களை நோக்கி ஓடும் எண்ணங்களை இறைவன் மீது திருப்ப வேண்டும்.

உலக விஷய ஆசைகளை துறக்க வேண்டும். உலக விஷய சுகங்களில் ஈடுபட்டுக்கொண்டே, பக்தி செலுத்த முடியாது. பற்றில்லாமல் உலகில் கடமைகளை செய்துகொண்டு, பக்தி செய்ய முடியும்.

ஏனெனில் இறைவன் ஒருவரே அன்புக்கும் ஆசைக்கும் உரியவர். அவரிடம் மட்டும் பிரியம் வைக்க வேண்டும். ஏனெனில் நான், எனது என்று நினைக்கும் போதுதான் அங்கு ஆசை உண்டாகிறது.

பகவானின் பக்திக்கு முன் நான் என்பது எங்கே வரும்?

நான் பகவானுக்கு சொந்தமாகிவிட்டேன் அல்லவா, எனது என்பது எதுவும் இல்லை, எனக்கு சொந்தமானது என்பதை அனைத்தையும், அவர்க்கு அர்ப்பணித்துவிட்டேன் என்ற மன நிலையில் இருக்கவேண்டும்.

புலன் வழி சுகங்களில் மனதை செலுத்தினால் அவற்றில் மனம் சிக்கிக்கொள்ளும். மனதில் வேறு ஆசைகளை வைத்துக்கொண்டு வெளிப்பார்வைக்கு கோவிலுக்கு சென்று பக்தி செய்வது போல இருப்பது வெளிவேசமாகும். பகவான்

மீது அன்பு இதயத்தில் இருந்து வரவேண்டும். உள்ளம் உருகி பாட வேண்டும்.

உலக விசயங்களில் ஈடுபட்டிருப்பவர்கள் இறைவன் மீது பக்தி கொண்ட மன நிலை உருவாகும் பரமானந்தத்தை அறிய மாட்டார்கள். அது போல, இறைவனுக்காக பக்தி என்ற தேனை குடித்த பக்தர்கள் உலகியல் விஷயங்கள் என்ற கரும்பு சாற்றை நோக்கி போக மாட்டார்கள்.

இந்த மனம் மிக மோசமானது. இதில் மிருக குணமும் உண்டு. தேவ குணமும் உண்டு. இதை இழுத்து பிடித்து பகவான் திருவடிகளில் பதிய வைக்க வேண்டும். இல்லையேல், நொடியில் அது வேறு விசயங்களை நோக்கி ஓடி விடும். அதற்கு மனம் வைராக்கியத்தை அடைந்து பக்குவப் படவேண்டும்.

தியானம், பஜனை இன்று செய்யலாம், நாளை செய்ய முடியவில்லை என்று இருக்கக்கூடாது. அது தொடர்ச்சியாக நடைபெறவேண்டும்.

**கீதையில் ஸ்ரீ கிருஷ்ண பகவான் இதையே கூறுகிறார்.**

அனன்ய பக்தி கொண்டு என்னை என்றும் நினைப்பவர்களுக்கு நான் சுலபமாகிவிடுகிறேன். ஏனெனில் அவர்கள் மிக உறுதியாக இருக்கிறார்கள்.

இறைவனை நினைத்து நினைத்து அகண்ட பஜனை செய்வார்கள். அன்றாட வேலைகள் செய்யும் போதும், அதாவது, குளிக்கும்போது, உணவு உண்ணும் போதும், வேறு

பல கடமைகள் செய்யும் போதும் பகவானின் திருநாமங்களை ஜபித்துக்கொண்டே இருப்பார்கள். உயிர் மூச்சில் நாம ஜபம் கலந்து விடும்.

உலகில் மனித சமுதாயத்தின் நடுவில் வாழ்ந்து கொண்டிருக்கும் போது, மனதில் இறைவனை சுமந்து கொண்டே இருக்கவேண்டும். அவனுக்காக எல்லாப் பணிகளையும் செய்ய வேண்டும். காதால் அவன் புகழ் கேட்கவும், வாக்கால் அவன் புகழ் பாடவும் அதிக நேரம் செலவிடப்படவேண்டும். அவ்வாறு செய்யும் போது, வெட்டிப் பேச்சுகளிலும், வீண் விவகாரங்களிலும் ஈடுபட வாய்ப்பிருக்காது.

தன் சுயநலத்திற்காக, பொருளீட்டுவதற்காக, பணத்திற்கு பின்னால் போகும் மனிதர்கள், அந்த பரமாத்மாவை மறந்து, சொந்த சுகத்திற்காக, இவ்வாறு உயிர் வாழ்ந்து, முடிவில் இறக்கும் இந்த மனிதர்கள் உலகில் எதை சாதித்தார்கள்.

இவர்கள் ஐந்து அறிவு, இரண்டறிவு, ஓரறிவு படைத்த மிருகம், பறவைகள், ஜீவ ஜந்துக்களை விட கீழானவர்கள். ஏனெனில் மிருகம், பறவைகளுக்கு சூதும், பொய்யும் தெரியாது. பிறரை வஞ்சிக்கவும் தெரியாது.

பகவான் சம்பந்தப்பட்ட தேவை இல்லாத கற்பனை கதைகளும், பேச்சுக்களும் உலக வாழ்க்கைக்கு தேவையாக இருக்கலாம். ஆனால் உண்மையில் இறைவனை நெருங்க வேண்டும் என்று பக்தி செய்பவர்களுக்கு அவைகள் வீணானவையே.

பகவானின் திருநாமங்களும், குணங்களும் அடங்கிய பாட்டு அதுவே புண்ணியமும் மங்களமும் தரும். இதுவே சாத்தியமானது. அந்த மகிமையை அறிந்தவர்களுக்கு ரம்யமாகவும் சலிக்காமலும் நித்தமும் புத்தம் புதிதாகவும் இருக்கும். மனதிற்கு இன்பம் தரும். அதை மனதில் பக்தியுள்ளவர்களே அனுபவிக்க முடியும். ஆனந்தமாக அதை ஏற்றுக்கொள்பவர்களுக்கு, துக்க கடலில் இருந்து கரை சேரும் உணர்வு உண்டாகும்.

பகவான் நாமத்தை எப்படி நினைத்தாலும், அது தன் சக்தியை அவசியம் வெளிப்படுத்தி விடும். நெருப்பின் சக்தியை தெரியாமல், அதை தொட்டால் அது தன் சக்தியை காட்டி விடும்.

அது போல பகவானின் பெயரால், வேறு ஒருவரை அழைத்தாலும், அல்லது கேலி செய்தாலும், அல்லது வேறு விஷயங்கள் பேசும் போது நடுவில் அறியாமையில், பகவானின் பெயரை உச்சரிக்கப்படுவதாலும், அந்த திரு நாமத்திற்கு சக்தி குறையாது. அதாவது எந்த சூழலிலும், மனிதர்கள் பாவம் அழியும்.

பகவானின் மகிமையை புகழ்பாடும் அனைத்து புராணங்களும், திருநாமங்களை பற்றி பெருமை பேசுகின்றன. எல்லா தெய்வங்களுக்கும் ஆயிரம் திருநாமங்கள் உள்ளன.

பாகவத புராணத்தில் தன் தாயிடம் கபில முனிவர் கூறுகிறார்:

“பகவான் நாமங்களை உச்சரிப்பவன் எப்படிப்பட்டவனாக இருந்தாலும், அவன் மேன்மை அடைகிறான். அவன் தவங்களை செய்து விட்டான். கங்கை முதலிய ஆறுகளில் நீராடிவிட்டான், யாகங்கள் செய்து விட்டான், வேதங்களை ஓதி விட்டான், இதை அறிந்து கொள்க”

அவர் மேலும் கூறுகிறார்:

மனிதன் நடந்து கொண்டிருக்கும் போது தடுக்கி விழுந்தால், **ஹரி**, **ஹரி**, அல்லது **ராம**, **ராமா** என்று உச்சரிக்கவேண்டும். வலியால் துடிக்கும் போதும் **ஹரி**, **ஹரி** அல்லது இஷ்ட தெய்வங்களான **சிவ**, **சிவா** என்றோ கூற வேண்டும். இவ்வாறு பழகி விட்டால் பழக்கம் காரணமாக தன்னை அறியாமல் பகவான் நாமம் வாயிலிருந்து வந்தால் எல்லா பாவங்களும் கழுவப்படும்.

பகவான் நாமங்களை உச்சரிக்கும் போது முடிவில்லா பரம்பொருளான இறைவன் நிச்சயமாக செவிமடுக்கிறார். ஆபத்து காலத்திலோ அல்லது தேவைப்படும் போதோ பக்தர்கள் அவன் நாமத்தை உச்சரித்து அழைத்தால் இறைவன் நிச்சயம் அங்கு வருவார். கண்ணிற்கு தெரியாவிட்டாலும், அவர் அருளை நிச்சயமாக அங்கு உணர முடியும். வர இருக்கும் ஆபத்துகள் விலகும். துன்பத்தில் மாட்டிக்கொள்பவர்கள் நிச்சயம் அதிலிருந்து விடுபடுவார்கள். இது சத்தியம்.

மேலும் பகவான் திருநாமங்களை உச்சரிக்கும் போது பகவான் அவர் சித்தத்தில் அமர்ந்து, பாவங்களையும், அஞ்ஞான இருளையும் அழித்து விடுகிறார்.

சூரிய ஒளி பரவும் போது இருள் காணாமல் போகிறதல்லவா?

அதுபோல! அறியாது தன்னிச்சையால், பகவான் நாமம் உச்சரிக்கப்படும் போதே, இவ்வளவு பலன்கள் கிடைகின்றதே என்றால், பிரியமுடன் அன்பு மேலிட, உள்ளம் உருகி உச்சரிக்கும் போது, அதன் பலனை கேட்கவா வேண்டும். பல ஜென்மங்கள் செய்த பாவங்கள் ஒழியும். பிறவி பெருங்கடலில் இருந்து விடுபட்டு இறுதியில் இறைவனிடம் இரண்டற கலந்து விடலாம்.

அடுத்து, மகா புருஷர்களின் சேர்கையால் சீக்கிரமே நமக்கு இறையருள் கிடைத்துவிடும். எவ்வளவு குறுகிய காலத்தில் யோகம் செய்தாலும், சாங்கிய யாகம் அறிந்திருந்தாலும், புண்ணியம் செய்தாலும், வேதங்களை படித்தாலும், தவம், தியாகம், யாகங்கள் செய்தாலும், தான தட்சிணைகள் கொடுத்தாலும், யம நியமங்கள் கடைபிடித்து தீர்த்தாடனம் செய்தாலும், விரதங்கள் இருந்தாலும், அவர்களுக்கு நான் வசப்பட மாட்டேன் என்று பாகவதத்தில் பகவானே கூறுகிறார்.

இதற்கு காரணம் என்ன வென்றால், மேற்சொன்ன சில சாதனைகள் உலகியல் ஆசையின் அடிப்படையில் அல்லது பரலோக ஆசையின் அடிப்படையில் செய்யப்படுகின்றன.

மேலும் அந்த சாதனைகள், பலனை எதிர்பார்த்து செய்த பின், சித்தம் தூய்மை அடைந்து, முக்தி அடைய தகுதி கிடைக்கிறது.

ஆனால் மஹா புருசர்களின் சேர்கையால், மிக எளிதாக, சுதந்திரமாக, மாறாத '**பிரேமைபக்தி**' கிடைத்து விடுகிறது. அது அவர்கள் நம் மீது அன்பு கொண்டு பேரருளை பொழிவதற்கு மட்டும் கிடைக்கும் மிக அரிதான வாய்ப்பு.

பூர்வ ஜென்மத்தில் புண்ணியமான பலனால், அல்லது இறைவனை தொழுத பலனால், நேரடியாக பகவானின் சிறிதளவு அருள் கிடைத்தாலும் உய்வடையலாம். ஆனால், பகவானின் அருளால் தான், மகா புருஷர்களின் சந்திப்பும் கிடைக்க கூடும். அந்த சந்திப்பு மிக அரிதானது.

உலகில் நேர்மையான சுபாவமுள்ள, தர்ம சிந்தனை உள்ள நல்லொழுக்க சீலர்களாக இருக்கப்படும் தெய்வ சம்பத்து படைத்த மகான்களை காண்பது அரிது.

உபதேசங்கள் சொல்வது சுலபமானது. அதை கடைபிடிக்கும் சாதுக்களோ, பரம ஞானிகளோ எளிதில் கிடைக்க மாட்டார்கள். நாம் உண்மையாக சரண் அடைந்தாலும், பார்த்தும் பார்க்காமல் இருப்பார்கள். பிரேமைபக்தி அவர்கள் மூலமாக, அவ்வளவு எளிதாக கிடைப்பதில்லை. இதனால், உயர்ந்த ஞானிகளை அடையாளம் காண முடியாமல் போகின்றது.

சிலர் எல்லாம் அறிந்தவர்களாக, சாஸ்திரம் தெரிந்தவர்களாக இருப்பார்கள். கவர்ந்திழுக்கும் பேச்சு திறமை உள்ளவர்களாகவும் இருப்பார்கள். பக்தர்கள் போல தத்துவ

மேதைகள் போல நடிப்பார்கள். மனம் உருகுவது கண்ணீர் வடிப்பது, தெய்வம் தன்னில் இறங்கி விட்டது என்று ஆடுவது, எல்லாம் புற தோற்றதால் தெரிந்தாலும், எதையும் நிச்சயமாக நம்ப முடியாது.

சிலர் ஆழ்கடல் போல எந்த ஆர்பாட்டமும் அல்லாது இருப்பார்கள். எதையும் நிச்சயிக்க முடியாது. நான் தான் பெரிய ஞானி என்று எவரும் தன் வாயால் சொல்வதில்லை. ஆதலால் உண்மையான மகானை கண்டுபிடிப்பது மிகவும் கடினம்.

அதிஷ்டவசமாக ஒருவர் கிடைத்துவிட்டால் பிறவி எடுத்த பலனை அடைந்துவிடலாம். அவரிடம் சென்று சரண் அடைந்தது வீண் போகாது.

சாதரணமாக ஒரு நல்லவரோடு நட்பு கொள்ளும்போது நம் மனதிற்கு இதமாக இருக்கிறது. நமது துன்பங்கள் தீர்ந்துவிட்டது போல அனுபவம் உண்டாகிறது. அதற்கும் மேலாக நமக்கு மகா புருசர்கள் கிடைத்தால் நமது பாக்கியமே பாக்கியம். அவர்கள் நம் மனதை தூய்மை படுத்தி பகவானை நோக்கி திருப்பி விடுவார்கள். அவர்கள் தரிசனத்தால் நமக்கு அடிமனதில் பக்தி சுரக்கும்.

எல்லாம் வல்ல அந்த இறைவனின் திருவருளால் மட்டுமே மஹா புருஷர்களின் சந்திப்பு நிகழும்.

பகவான் எவரை தன்னுடயவனாக ஆக்கிக்கொள்ள விரும்புகின்றாரோ, அவரிடம் தன் சொருபமாக விளங்கும் மகானை அனுப்புகின்றார்.

ஆதலால் மகான்களை சந்திக்க அவசியம் முயற்சிக்க வேண்டும். அப்போது வெகு சீக்கிரமே பகவானின் அருளை பெற்று விடலாம்.

வெளி தோற்றத்தில் மகான்களை பற்றி எதுவும் தெரியாவிட்டாலும், நெடுநாள் அவர்கள் கூட இருந்து பழக வேண்டும். அவர்கள் எப்படி பட்டவர்கள் என்று சில காலத்திற்கு பின் அறிந்து கொள்ளமுடியும். தன்னையும் முழுமையாக அர்ப்பணித்து விட வேண்டும்.

மகான்களும் தன்னை நாடி வருகின்ற அனைவரையும், உற்றவராக நினைத்து பகவானின் பக்தியோக ரகசியத்தை உபதேசித்து விட மாட்டார்கள். அவர்கள் உள் மனதில் தெய்வ சங்கல்பம் அனுமதி தந்தால் தான் ஏற்றுக்கொள்வார்கள்.

அவர்களிடம் உண்மையாக நடந்து கொண்ட பின் உலகியல் ஆசைகளை பெரிதாக மதிக்கிறோமோ என்று அறிந்த பின்னரே நம்மை பகவானை நோக்கி திசை திருப்புவார்கள். அவர்கள் அருளால் (நம்மை சோதித்தபின்) நாம் பகவானின் அன்புக்கு பாத்திரமாகி விடுவோம். நமது மனமும் அருள் தாகம் எடுத்து பகவானுக்காக ஏங்கும், உருகும்.

பகவானின் பிரேமையில் இரண்டறக்கலந்த பக்தர்கள் நம்மை என்றும் கை விட மாட்டார்கள். அவசியம் நம்மை கரை சேர்ப்பார்கள். இப்படிப்பட்ட மகான்கள் மோட்சத்தையும் விரும்பாதவர்கள். மக்களை உய்விப்பதற்காகவே ஜென்மமெடுப்பார்கள்.

பகவானின் அருளை பெறுவதற்காக அலையும் பக்தர்களை சந்தித்து மிகவும் மகிழ்ந்து ஞானத்தையும், பக்தியையும் உபதேசிப்பார்கள். அவர்கள் தரிசனமும், ஸ்பரிசமும், பேசுவதும் மிக புண்ணியத்தை தரும். உலக துன்பங்களில் இருந்து விடுபட அது ஒரு நல்ல வாய்ப்பு என்று நாம் உணர வேண்டும்.

நல்லவர்களின் சேர்க்கை எவ்வளவு அவசியமோ, அதைவிட தீயவர்களைத் தவிர்ப்பது மிக முக்கியம்.

தீயவர்களின் நட்பால் தீய விஷயங்கள் மனதில் குடி புகும். புலன் விசயங்களுக்கு அடிமையாகி விடுவது, பிறரை தீய வார்த்தைகளினால் திட்டுவது, தன் சொந்த சுகத்தை நாடி போவது, ஒழுக்கம் கெட்டு திரிவது, பெரியோருக்கு கீழ் படியாமல் இருப்பது, தன்னுடைய சந்தோசமே பெரிது என்று நினைப்பது, தீய விசயங்களை பற்றிக் கொள்வது, சுய கௌரவம் கருதுவது, கோபம், கர்வம், பொறுமையின்மை, அகத்தூய்மை, புறத்தூய்மை இல்லாமல் இருப்பது, இரக்கமின்மை, அசாத்தியமாக இருப்பது, அமைதி இல்லாமல் அலைவது, இதுபோன்ற, தீய குணங்களுடன் ஒருவன் உயிர் வாழ்ந்தால், அவன் தன்னை அதோகதிக்கு தள்ளிவிட்டவன் ஆவான்.

<u>பாகவத புராணத்தில் கபில முனிவர் தன் தாயிடம் கூறுகிறார்:</u>

நல்லவர் நட்பை துறந்து மீண்டும் ஏன் பாவகுழியில் விழவேண்டும்? பெண் பித்து பிடித்தவர்களோடு சேர்ந்தால் அவர்கள் மனதில் இருள் சூழும். மேலும் சத்தியம், தூய்மை,

தயை, நல்லறிவு, மானம், புகழ், சாந்தி எல்லாம் பறந்தோடி விடும். இவர்கள் எதிர்காலம் சிதறுண்டு போகும்.

ஆதலால் புலன் இன்பங்களை பெரிதாக நினைக்கும் கீழ் பிறவி அடைந்த மனிதர்களோடு தொடர்பு கொள்ள கூடாது.

துளசிதாசர் ராமாயணத்தில் கூறுகிறார். நரகம் மிக மோசமானது. தீயவர்களின் சேர்கை அதனினும் கீழானது. தீயவர்களின் சேர்கை இல்லாதபோதும், மனம் வேறு விசயங்களை பற்றி சிந்தித்து தடுமாறினால், உடனே பகவானை சரணடைய வேண்டும். தன்னுடைய நல்ல எண்ணங்களால் வெற்றி காண வேண்டும். நாம் வாழும் வாழ்க்கை முறை தீமைகள் இருக்கின்றனவா என்று எப்போதும் ஆராய்ந்து செயல்பட வேண்டும்.

பகவான் சம்பந்தப்பட்ட தத்துவங்களையும் நாம ஜெபம், பஜனைகளையும் விட்டு விட்டு, புலன்களுக்கு இன்பம் தரும் உலகியல் விசயங்களில் கவனம் செலுத்துவதே தகாத விஷயம். சர்வ நாசத்திற்கும் இதுவே மூலக்காரணம்.

மனம் ஓயாது எதைப் பற்றி சிந்திக்கின்றதோ அதில் பற்று ஏற்படுகின்றது. தீயவர்கள் அல்லது தீமை விளைவிக்கும் விசயங்களோடு தொடர்பு கொள்வதால் மனிதனின் சரீரம், வாக்கு, மனம் அடங்காத ஆசைகளோடு அடிமையாகின்றன.

ஆசைக்கு அடிமையாகிவிடும்போது, பேராசை மேலும் பெருகுகிறது. ஆசை நிறைவேறாவிட்டால் கோபம் வருகிறது.

கோபத்தால் மதி மயக்கமும் நினைவாற்றலும் அழிகிறது. அறிவு நாசத்தால் இகலோக, பரலோக நலன்கள் அழிகின்றன.

<u>பகவத் கீதையில் ஸ்ரீ கிருஷ்ணர் கூறுகிறார்.</u>

ராஜச குணத்தால் உண்டாகும் காமமும், (சகலவித ஆசைகளும் காமத்தில் அடங்குகின்றன) குரோதமும் தான் மனிதனை பாவக்குழியில் தள்ளுகின்றன. எல்லா நன்மைகளையும் இவை அழித்து விடுகின்றன. அர்ஜுனா, இவை இரண்டையும் நீ பரம எதிரிகளாக நினைப்பாயாக.

தீமைகளை வேருடன் களைய வேண்டும். சிறிதளவு தேங்கி விட்டால் கூட, அவை படிப்படியாக வளர்ந்து, ஆபத்தை விளைவிக்கும். தீயின் சிறு பொறியை விட்டு வைத்தாலும், அது பெரிய நெருப்பாக மாறி எல்லாவற்றையும் சாம்பலாகி விடும்.

ஆரம்பத்தில் காமகுரோதாதிகள் சிறு அலை போல தோன்றினாலும், சூழ்நிலைக்கு ஏற்றவாறு பெருகி கடல் போல ஆகி விடும் என்று கூறுகிறார்கள்.

தீய எண்ணங்களை விரட்டிவிடும் நம் மனதில் நல்ல குணங்கள் அதிகமாகவும், தீய எண்ணங்கள் குறைவாகவும் இருக்கின்றன என்று நினைத்து கொள்ள கூடாது. இந்த மனதை அடிக்கடி சோதித்து பார்த்துக்கொண்டே இருக்க வேண்டும். இந்த மனமானது கீழான விசயங்களை நோக்கி விரைந்து பாயக்கூடியது.

**மாயையை வென்று எவன் கரை சேருகிறான்?**

**ஜனன மரணத்தை விட்டு எவன் கடைத்தேருகிறான்?**

என்ற கேள்வி எழும் போது தேவைக்கு அதிகமாக இருக்கும் (ஏனெனில் உலகில் வாழ்வதற்கான சில விஷயங்கள் இன்றியமையாதவை) உலகியல் விசயங்களில் ஈடுபாட்டை துறந்து விட்டவன், பக்தர் அல்லாதவர்களுடன் அதிக நட்பு கொள்ளாமல், தீயவர்களோடு சுத்தமாக தன் தொடர்பை துண்டித்துக் கொண்டவன் எவனோ, அவனே கடைத்தேருவான்.

மகான்களோடு தொடர்பு கொள்பவன், பற்றற்ற வாழ்க்கை வாழ்ந்து நான் என்ற அகந்தையை விட்டொழிப்பான்.

நதியில் நீந்த வேண்டுமானால் கைகளாலும், கால்களாலும் நீரை அடித்து விலக்கிக்கொண்டே போனால் மூழ்காமல் இருக்கலாம். அது போல, இந்த மகா மாயை என்ற நதியை நீந்தி கடக்கவேண்டுமென்றால், தன் இருகைகளாலும் அகங்காரத்தையும்,விசயபற்றையும், விலக்கிக் கொண்டேப் போக வேண்டும். இல்லையேல் முடிவில்லா பிறவிப் பெருங்கடலில் மூழ்கி விட வேண்டியது தான்.

மாயை என்ற சம்ஸாரக்கடலில் நீந்திக் கொண்டிருக்கும் போது கைகால்கள் சோர்ந்து விடும்போது, ஒரு படகு கிடைத்தால் எப்படி சந்தோஷம் உண்டாகுமோ, அது போல மகான்களின் நட்பு கிடைத்தால் அவர் திருவடிகளைப் பற்றிக்கொள்ள வேண்டும்.

பாகவதபுராணம் கூறுகிறது. மிகுந்த குளிர் பிரதேசத்தில் தீயை மூட்டி பக்கத்தில் குளிர் காய்வார்கள். அதனால் குளிரும் விலங்குகளில் இருந்து பயமும் நீங்கி, இருளும் அகன்று சுகம் கிடைக்கும். அதுபோல மகான்களின் நிழலில் இருந்து கொண்டால், பாவங்கள், ஜெனனமரண பயம், அஞ்ஞான இருள் இவை மூன்றும் விலகி சென்றவுடன் நமக்கு அலாதியான அமைதி கிடைக்கும்.

மாயையை கடக்க ஐந்து உபாயங்களை கூறுகிறார்கள்.

நான், எனது, என்ற பற்று சொத்து சுகங்கள் நடுவில் இருந்தால் வைராக்கியம் உண்டாகாது. மேலும் பற்று தான் உண்டாகும். ஆதலால் பகவத் விஷயங்கள் அல்லாதவற்றில் நெருக்கம் கொள்ளாமல், தனித்து வாழ வேண்டும் என்று கூறி இருக்கிறார்கள்.

பகவத்கீதையிலும் பகவான் அதையே கூறுகிறார்.

**"விவிக்ததேசஸேவித்வமரரதிர் ஜனஸம்ஸதி"**

உலகியல் விவகாரங்களில் ஈடுபட்டிருக்கும் ஜனக்கூட்டத்தில் இருந்து விலகி தனித்து இருக்க வேண்டும். இந்த சூழ்நிலை பகவத் தியானத்திற்கு உகந்தது.

எவ்வளவு தான் பகவான் மீது ஈடுபாடாக இருந்தாலும் அதற்கு தக்க சூழ்நிலை இல்லாவிடில் எதிலும் சரியாக கவனம் செலுத்த முடியாது. பகவானின் பிரேமையில் கட்டுப்பட வேண்டுமானால் உலகியல் பந்தங்கள் என்ற கட்டுக்களை அறுக்க வேண்டும். உலகியல் விவகாரங்களில் எவ்வளவு

துன்பம் இருக்கின்றன. பகவானை நோக்கி போகும் பக்தி வழி எவ்வளவு நிம்மதியும் ஆனந்தமும் இருக்கின்றதென ஒப்பிட்டு பார்க்கவேண்டும். இதனால் தாமாக பந்த பாசங்கள் கழன்று விடும்.

முக்குணங்களில் உருவானதே இந்த உலகம். உலகப்பற்றை அறுக்க வேண்டுமானால் முக்குணங்களில் இருந்து விடுபட வேண்டும். **சாத்வீக**, **ராஜச**, **தாமச** குணங்களை ஜெயிக்க வேண்டும். இல்லையேல் அவை உலக விவகாரங்களில் நம்மை அமிழ்த்திவிடும்.

**சாத்வீகம்** என்பது அதிக அன்பும், பாசமும், அதிக இரக்கமும் கொள்வது. அதிக அன்பாலும், அதிக இரக்கத்தாலும் ஒருதலை பட்சமாகிவிடும் நிலையில் ஒருவருக்கு பரிந்து, ஒருவரை பகைத்து கொள்ளும் கட்டாயம் ஏற்படும். அல்லது பிறரை இம்சிக்கும் குணம் தலை தூக்கும்.

**ராஜசம்** என்பது கோபம், எதிலும் வேகம், பிறரை இம்சிக்கும் குணம் ஆகியன.

**தாமசம்** என்பது சோம்பல், செயல்படாமல் தூங்கிகொண்டிருப்பது, மயக்கம் முதலியன. இவை மூன்றும் தவிர்க்கப்பட வேண்டும்.

<u>பகவத்கீதையில் பகவான் கூறுகிறார்:</u>

வேதங்களும் முக்குணங்கள் கொண்டவை. அதாவது முக்குணங்களை வெளிப்படுத்தும் உலகியல் விசயங்களையே பேசுகின்றன. ஆதலால் அர்ச்சுனா நீ முக்குணங்கள் வலையில்

சிக்காமல் இருக்க வேண்டும். நித்தமும் தூய, சத்துவ சித்தமுடன் சுக துக்கங்களால் பாதிக்கப்படாமல், யோக க்ஷேமங்களை சிந்திக்காமல் பரமாத்மா சொரூபத்தில் நிலைத்திருக்க வேண்டும்.

**யோக க்ஷேமம்** -- கடவுள் விசயத்தில் யோகமென்பது கடவுளை அடைவது அல்லது கடவுளை அடையும் உபாயத்தை, வழியை அடைவது. க்ஷேமம் என்றால் பகவானை அடையும் வழியை அறிந்து அதிலுருந்து பிறழாமல் சாதனை செய்வது.

இரண்டுவித யோக க்ஷேமங்களை பற்றி கொண்டு கவலை பட்டுக்கொண்டு இருக்க வேண்டாம். எல்லாவற்றையும் முழு பொறுப்பையும் பகவானிடம் அர்ப்பணித்து விட்டு பகவானை வழிபடுவதிலேயே குறியாக இருக்க வேண்டும் என்று கூறுகிறார்கள்.

**“எவன் ஒருபோதும் மகிழ்வதில்லையோ**, **வெறுப்பதில்லையோ**, **துயரப் படுவதில்லையோ**, **எதற்கும் ஆசைப்படுவதில்லையோ**, **எவனொருவன் நல்லதும் தீயதுமான செயல்கள் அனைத்தையும் துறந்தவனோ**, **அந்த என்னிடம் பக்தியுள்ளவன் எனக்குப் பிரியமானவன்.”** - ***பகவத்கீதை***

என்னை மட்டும் உபாசிக்கும் பக்தர்கள் என்னை மட்டும் நம்பி இருப்பார்கள். அவர்களின் யோக க்ஷேமங்களை நானே பொறுப்பேற்று சுமந்து கொண்டு இருக்கிறேன் என்று கீதையில் பகவான் தெளிவுபடுத்துகின்றார்.

பக்தர்களோ பகவான் பிரேமையில் மூழ்கி மற்ற விசயங்களை மறந்து விடுவார்கள். இதில் வேதங்களில் சொல்லப்பட்ட கர்மங்களை சரிவர செய்ய முடியாமல் போக, எல்லா கர்மங்களும் தாமாக விடுபட்டு விடும். அவன் வேதங்களை கடந்து உபநிசதங்கள் கூற்றுப்படி இறைவனில் இரண்டற கலந்து விடுகிறான். என்றென்றும் மனதில் இறைவனை குடி வைத்து அவனை விட்டு இணை பிரியாமல் பேரின்பம் அடைகிறான்.

இப்படிப்பட்ட பக்திமான் பிறவி பெருங்கடலில் இருந்து கரை சேர்கிறான். தான் மட்டுமில்லாமல் தன்னிடம் வந்தவர்களையும் கரை சேர்த்து விடுகிறான்.

"**மத் பக்தி யுக்தோ புவனம் புனாதி**"

என்று பாகவதம் கூறுகிறது.

அதாவது தூய பக்திமான் இறைவனோடு உண்மை, பிரேமை கொண்டவன், தான் இருக்கும் சுற்று சூழலை தூய்மை ஆக்குகின்றான். உலக மக்களையும் கரை சேர்ப்பதால் அகில உலகையும் தூய்மை படுத்துவான்.

பகவானிடம் உண்மை பக்தன் காட்டுகின்ற பிரேமை, காதல் எல்லாம் வார்த்தைகளால் விளக்க முடியாது. அதை அனுபவிப்பவர்களே பாக்கியசாலிகள். "**அன்பே சிவம்**" என்ற கூற்று படி பகவான் அன்பு மயமானவர். பிரேமைக்கும் பகவானுக்கும் எந்த வித்யாசமும் இல்லை. பகவானை நினைத்தால் இனிக்கும் அனுபவம் ஏற்படுகிறது. உள்ளம் உருகி

பரவசமாகிறது. பரப்பிரம்மம் வாக்குக்கு அப்பாற்பட்டது என்று உபநிசதங்கள் கூறுகின்றன.

உலகில் நெடுநாள் பிரிந்து போன, தமக்கு அன்புக்குரிய மகன், உற்றவர், தாய் தந்தை, நண்பர் மீண்டும் சந்திக்கும் போது அளவில்லா ஆனந்தம் உண்டாகிறது. அவர்களுடன் பேசுவதிலும், தொடுவதிலும், அலாதியான அன்பு சுரந்து இன்பம் உண்டாகிறது. அதை வார்த்தைகளால் வர்ணிக்க முடியாது.

இனிப்பின் ருசியை சுவைத்துச் சாப்பிட்டு பார்த்தால் தான் உணரமுடியும். அது எப்படி இருக்கிறது என்று கேட்டால் வாய் பேச தெரிந்த நாம் இனிக்கிறது என்று கூறுவோம்.

இனிக்கிறது என்றால் என்ன ?

இதற்கு பதில் கூற முடியாது.

ஊமை ஒருவன் இனிப்பை சாப்பிட்டு அந்த ருசியை அவனால் கூற முடியாது. அந்த நிலை தான் பிரேமையை உணர்ந்த பக்தர்களுக்கு உண்டாகிறது. அவர்களும் அதை வர்ணிக்க இயலாமல் ஊமையாகி விடுவார்கள்.

பிரேமையின் தெய்வீக ஆனந்த ரசத்தில் மூழ்கி விட்டவனுக்கு எல்லா பொருள்களும் உயிர்களும் தன் இனிய தலைவன் பகவானின் ரூபங்களாகவே தெரியும்.

எதை கேட்டாலும் பகவானின் குரலாகவே கேட்கும். எதை பேசினாலும் தன் பிரபுவான பகவானை பற்றியே பேசுவான். சிந்திப்பதெல்லாம் தன் அன்புக்குரிய நாயகன் சம்பந்தப்பட்டதாகவே இருக்கும். மற்ற நபருக்கோ பொருளுக்கோ இடமிருக்காது. பக்தன் பகவானை நினைத்து பித்தன் போல நடந்து கொள்கிறான்.

ஆகாயத்தில் ஓம் என்ற ஒலி ஆண்டவனின் குரலாக கேட்கிறது. உலகில் ஒலிக்கும் ஒலியெல்லாம் ஓங்கார ஒலியின் வடிவங்களே. காற்றில் பகவானின் தெய்வீக மணமும், ஸ்பரிசமும் உணரப்படுகின்றன. அக்னியில் இருக்கும் ஜோதி பரஞ்சோதியாக தெரிகிறது. பறவைகளின் குரல்களும், காற்றில் அசையும் தாவரங்களும் **ஹரிசிவா**, **ஹரிசிவா**, என்றே ஒலி எழுப்புகின்றன என்று மகான்கள் கூறுகிறார்கள்.

*காக்கை சிறகினிலே நந்தலாலா நின்றன் -*
*கரிய நிறம் தோன்றுதையே நந்தலாலா*

*பார்க்கும் மரங்களெல்லாம் நந்தலாலா -நின்றன்*
*பச்சை நிறம் தோன்றுதையே நந்தலாலா*

*கேட்கும் ஒளியில் எல்லாம் நந்தலாலா நின்றன் -*
*கீதம் இசைக்குதடா நந்தலாலா*

*தீக்குள் விரலை வைத்தால் நந்தலாலா நின்னை -*
*தீண்டும் இன்பம் தோன்றுதடா நந்தலாலா* - பாரதியார் பாடல்

உலகமனைத்தும் பேரின்பமயமாக இருக்கிறது. எங்கும் ஆனந்த மயமாக இறைவன் சௌந்தர்யமும், மாதுர்யமும் நிறைந்து உணரப்படுகிறான். காணுகின்ற, கேட்கின்ற, உணர்கின்ற அனைத்தும் அவனாகவே அறியமுடிகின்றது.

வேதம் கூறுகிறது: -

"பகவானின் அருள் எங்கும் நிறைந்து இனிமையான காற்று வீசட்டும். சமுத்திரங்கள் இனிய ஓசை எழுப்பட்டும். மலர்கள் மதுவை பொழியட்டும். பயிர் பச்சைகளும், தாவரங்கள், ஔசதங்களும், அமிர்தம் பொழிந்து பூமியின் ஒவ்வொரு மண் துகளும் புனிதமாக இனிமையாக இருக்கட்டும்"

இவ்வாறு பக்தனின் பார்வையில் எல்லாம் இன்பமயமாக இருக்கும்.

பகவத்கீதையில் பகவான் கூறுகிறார்:

என்னை எங்கும் காணும் பக்தன் என்னில் சகலத்தையும் காண்கிறான். அவன் மனக்கண் முன்னிருந்து

நான் மறைவதில்லை. அவனும் என் சிந்தையில் இருந்து மறைவதில்லை.

<u>சாந்தோக்ய உபநிஷத் கூறுகிறது:</u>

**யத்ர நான்யத் பச்யதி** - பிரம்மத்தை தவிர அவன் எதையும் அறிய மாட்டான். அவன் அமரத்தன்மை வாய்ந்தவன். பிரம்மத்தை மறந்து எதையும் பார்ப்பவன், கேட்பவன், அற்பமானவன் அவனே இறப்பவன். எல்லையற்ற பிரமாண்டமாக இருக்கும் பிரம்மம் அமிர்தமயமானது, சாத்தியமானது, மதுரமானது, அது போல பிரேமையும் அதே தன்மையுடன் இருக்கிறது.

இதுவரை மேலான, மேன்மை தரும் பக்தியை பற்றி விவரமாக கூறினார்கள். அதற்கு சற்று கீழ்தளத்தில் உள்ள பக்தி குண பேதங்களால் மூன்று வகைப்படும்

மேல்நிலை பக்தியில் திளைத்தவர்கள் சீக்கிரமே பகவானின் பிரேமை அன்பில் கலந்து விடுவார்கள். பகவத் கீதையில் இதை "ஞானியின் பக்தி" என்றும் **"நிர்குணபக்தி"** என்றும் காரணமில்லா பக்தி என்றும் கூறப்பட்டுள்ளது.

இந்த காரணமில்லா பக்தியில் பக்தனின் சித்தமும், செயல்பாடுகளும் இடைவிடாமல் தன்னிச்சையாக பகவானை

நோக்கி பிரவாகமாக ஓடும். சித்தம் அனன்ய, பிரேம பாவம் கொண்டு பகவானை விட்டு விலகாமல் இருக்கும்.

கௌணி பக்தி என்பது முக்குணங்களை கொண்டது. அதாவது **சாத்வீகம்**, **ராஜசம்**, **தாமசம்**, ஆகிய மூன்று குண பேதங்களுடன் இருக்கிறது.

அனைத்து கர்மபலன்களும் பகவானுக்கே அர்ப்பணம் செய்து எதற்கும் ஆசைபடாமல் பகவானை ஆசையுடன் வழிபட்டு வருவது "**சாத்வீகபக்தி**" எனப்படும்.

ஆசைகளை அடிப்படையாக கொண்டு, உலகில் பெயருடன் புகழுடன் வாழ வேண்டும். ஐஸ்வர்யங்கள் பெற்று வசதியாக, சுகமாக வாழ வேண்டும் என்று ஆராதனை செய்வது (அதாவது இதில் விக்ரஹ ஆராதனையும் கோவில் வழிபாடும் இருக்கும்) கோவிலை கட்டி, பிறர் புகழ வேண்டும் என்பதற்காக போலியான பக்தி பஜனை செய்வது, அல்லது கோவிலில் விளக்கு போட்டு உபயம் என்று எழுதி வைப்பது, அல்லது கோவிலுக்கு தேவையான பொருள் உதவி செய்யும் போதும் பண உதவி செய்யும் போதும், தன் பெயரை பொறிக்கசெய்து உபயம் என்று எழுதி வைப்பது, இதுவே "**ராஜச பக்தி**" எனப்படுகிறது.

பிறருக்கு கஷ்டத்தை கொடுத்து, இம்சித்து பக்தி, பஜனை எல்லாம் செய்வது "**தாமசபக்தி**" என்பதாகும்.

இந்த வரிசையில் உயிர் பலி கொடுத்து, இம்சித்து, பூஜைகளை நடத்துவதும் தாமச பக்தியை சேர்ந்தது. பிறருடன் போட்டி

போட்டுக்கொண்டு வழிபாடு செய்வதும், ஆடம்பரமாக செலவு செய்து விழா எடுப்பதும், பொருட்களை கோவிலுக்கு தானமாக தந்ததை பெருமையாக பேசிக்கொள்வதும் தாமச பக்தியை சேர்ந்தவை.

கௌணீ பக்தர்கள் முறையாக பகவானை உபாசிப்பதில்லை என்றாலும், இவர்கள் நிச்சயம் பகவானை நெருங்க முயற்சி செய்கிறார்கள். படிப்படியாக இவர்களும் அகத்தூய்மை பெற்று நிச்சயம் பகவானை அடைவார்கள்.

அடுத்து, வேறுவிதமாக மூன்று வகை பக்தர்கள் இருக்கிறார்கள்.

<u>பகவத் கீதை கூறுகிறது.-</u>

ஆர்த்த பக்தன், ஜிக் ஞாஸு பக்தன், அர்த்தார்த்தீ பக்தன் ஆகிய மூன்று வகை பக்தர்கள் தனி தனி இயல்பு உடையவர்கள்.

**<u>ஆர்தபக்தன்:</u>**

ஆபத்து, வியாதி போன்ற தன் கஷ்டங்களையும் பாவங்களையும் அழிக்க வேண்டும் என்ற ஒரே லட்சியத்துடன் பகவானை தொழுது பஜனை செய்வது கோவில் திருப்பணிகளை செய்வது ஆகிய வழிகளால் இறைவனை ஆராதிப்பவன் “**ஆர்தபக்தன்**” ஆகின்றான்.

**ஜிக்ஞாஸு பக்தன்:**

பகவான் என்றால் அவருடைய ஆற்றல் என்ன ? பகவானை தத்துவார்த்தமாக எப்படி அறிய முடியும் எங்கும் நிறைந்த ஈசன் எப்படி அருள் பாலிக்கிறார்? என்று பகவானை பற்றி நன்கு அறிய விரும்பும் வேட்கை கொண்டவன் தன் அரிய பிரேமை பக்தியால் உபாசனை செய்து நெருங்குகிறவன் "**ஜிக்ஞாஸு பக்தன்**" ஆகின்றான்.

**அர்த்தார்த்தீ பக்தன்:**

இவன் புராண காலத்து அசுரர்கள் போல தவமிருந்து நாம ஜபம், தியானம் செய்து வரங்களை கேட்பான். மென்மையான வாழ்வு, பெயர், புகழ், செல்வம் எல்லாம் பகவானிடம் விரும்புவான்.

உலகத்தின் நிலையில்லா, அற்ப சுகங்களுக்கும், சந்தோசங்களுக்கும், பகவானிடம் கையேந்துவது எப்படி இருக்கிறதென்றால், பொன்னும், பொருளும், ரத்தினங்களும் வழங்கும் பெரும் செல்வந்தனிடம் போய் எனக்குத் தவிடு வேண்டும் என்று கேட்பது போல உள்ளது.

உண்மையில் செல்வத்தினுள் பெரும் செல்வம் இறைவன் அல்லவா? அந்த செல்வத்தை அடைந்த பின் வேறு எந்த

செல்வம் பெரிதானது? அல்லது வேறு செல்வதை எதற்காக விரும்ப வேண்டும்?

முக்குண பக்திகளில் **சாத்வீக பக்தியே** சிறந்ததாக முதலிடம் பெறுகிறது.

அதுபோல ஆர்த்த பக்தி, அர்த்தார்த்த பக்தி, ஜிக்ஞாஸு பக்தி ஆகியவற்றில் **ஜிக்ஞாஸு பக்தியே** சிறந்ததாக முதலிடம் பெறுகிறது.

இறைவனை அடைய வேண்டிய மற்ற வழிகளை விட பக்தியோக வழியே சுலபமானது. கர்ம, ஞான, தியான யோகங்கள், அனுஷ்டானம் செய்வதற்கு கடினமானவை.

பக்தியோகத்தின் பலனோ எந்த பாதிப்புமின்றி கிடைத்து விடும்.

மற்ற சாதனைகளில் சிறிய தவறு ஏற்பட்டாலும் அதன் பலன்கள் எதிர்மாறாக இருக்கும். அல்லது சாதகர்களை பாதிக்க கூடியதாக இருக்கும். விலங்குகளும், பறவைகளும் பக்தி செய்து ஆண்டவனை தரிசித்த வரலாறும் உள்ளது. கஜேந்திரன் யானை, தவளை, பல்லி, சிலந்தி, வானரர், ஆகியோர் பக்தி செய்த வரலாறு கோவில்களில் சிற்பங்களாக, ஓவியங்களாக பேசப்படுகிறது. பக்தி செய்த பக்தர்களிடம் பகவான் தன் மகாமஹிமையை விட்டு இறங்கி வந்து விடுவார்.

ரிஷி முனிவர்கள் வியாசர், நாரதர், சுகதேவர் ஆகியோர் உருவமற்ற பரப்பிரம்மத்தை உணர்ந்தவர்கள். ஆயினும் இவர்களில் பகவானின் தெய்வீக குணங்கள், தெய்வீக இசை, ஆகியவற்றில் தன்னை இழந்து விட்டார்கள். ஏனெனில்

பகவானின் திருமேனி மாயையோடு கூடியது அல்ல. இது தெய்வீக ஜோதி சொரூபமானது. பகவத் கீதையில் அர்ச்சுனன் வியந்து தரிசித்த ரூபம். இதை சொல்லிலடங்கா பரம சாந்தியாக, ஆனந்த கடலாக வர்ணித்தாலும் நிறைவாகாது. அந்த பரஞ்சோதியின் பிரேமையும் அப்படிபட்டதேயாகும்.

பக்தர்கள் உலகியல் விசயங்களின் லாப நஷ்டங்களை பற்றி கவலைப்பட வேண்டியதில்லை. ஏனெனில் சிந்தை எல்லாம் இறைவனே நிறைந்து இருக்கும் போது அங்கு வேறு விசயங்களுக்கு இடமேது?

உலகியல் கடமைகளையும், வேத சாஸ்திரங்களை பின்பற்றி வாழும் முறைகளையும் முன்பே அவன் அர்ப்பணம் செய்து விடுகிறான். பக்தியின் உச்சத்திற்கு போன பின், தன்னையும் தன் கடமைகளையும் கூட மறந்து விடுகிறான். மற்ற சிந்தனைகள் அவனை விட்டு தாமாகவே சென்று விடுகின்றன. தன்னையே அர்ப்பணித்து விட்ட பின் அவனை சார்ந்த மனைவி, மக்கள், சொத்து, சுகங்கள் எல்லாம், தாமாக பகவான் திருவடியில் சேர்ந்து விடுகின்றன. **அவன் உயிர் வாழ்வதற்காக மட்டும் பட்டற்று கடமைகளைச் செய்கின்றான்.**

****************** ஓம் தத் சத் *******************

